VI

"வாள்உலாம் எரியும் அஞ்சேன்;
வரைபுரண் டிடினும் அஞ்சேன்;
நீள்சிலா வுலவா நிசியில்
நெடுவழி போவார் தம்மை
வாள்கொடு வீசு வேடர்
வழிப்பறி சிறிதும் அஞ்சேன்;
ஆள்அலா தன்பிலா துறவாடும்
அறிவிலார் உறைவைக்கண் டஞ்சுமாறே!

VII

"தகையிலாப் பழியும் அஞ்சேன்;
சாதலை முன்னம் அஞ்சேன்;"
நகைமுகங் காட்டி நண்ணித்
தகைபிலாத் தீமை செய்து
பகைமுகத் தஞ்சி யோடும்
பாதகர் உறவும் அஞ்சேன்;
பகைபிலா நேசர்போன் றுமோசஞ் செய்
நாசகாலர் உறவைக்கண் டஞ்சுமாறே!

VIII

"தறிசெறி களிறும் அஞ்சேன்;
தழல்விழி யுழுவை ‡ யஞ்சேன்;"
வெறிதரு மபலை அஞ்சேன்;
வெற்றிவேற் படையும் அஞ்சேன்;
பறிமுதற் கொடுக்க அஞ்சேன்;
பாவியர்தம் கர்மம் அஞ்சேன் [மந்தப்
அறிமுகங் காட்டிப்பின்னர் பறிபுகல்கொள்ளு
பாதகர் உறவைக்கண் டஞ்சுமாறே!

IX

"மஞ்சுலாம் உருமும் * அஞ்சேன்,
மன்னனே டுறவும் அஞ்சேன்;"
நஞ்சையே அமுதமென்ன நயந்துண்ணக்
கொடுப்பார்தம் வஞ்சம் அஞ்சேன்;
பஞ்சைபோற் கஞ்சிகூழைக் குடித்துயிர்
தரித்திருக்கத் தானும் அஞ்சேன்;
நெஞ்சிலே வஞ்சம்வைத்து நேசங்காட்
டறிவிலார்தம் முறவைக்கண் டஞ்சுமாறே!

X

"கோணிலா வாளி † அஞ்சேன்;
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்;"
ஊணிலா துறக்கம் விட்டு
ஊர்ப்புறம் உலாவல் அஞ்சேன்;
"நாணிலா அணிபி ஞானே"
நினைந்துமின் மீறற்ற மாட்டா
"ஆணிலா தவர்கள் செய்யும்
அறிவிலா உறவைக்கண் டஞ்சுமாறே!

உண்மைத்தர்ப்பணம்—"Fulfilment of the Law".

அஞ்சினேன் அச்சம் விட்டேன்
அடுத்தவன் காலைத் தொட்டே;
கெஞ்சினேன் கூச்சம விட்டேன்
கெடுத்தவன் வாலைச் சுட்டே;
துஞ்சினேன் தூக்கம் விட்டேன்
துரோகிசிங் கனையைக் கொன்றே;
மிஞ்சினேன் பெய் துடிக்க
மார்க்கம்விட் டவன் பேசக் கண்டே!

சிந்தாமணிக்ரஹம் 9-3-1912 } "விவேகசிந்தாமணி யரசு".

:o:

## "Heigh-ho the Holly!" A Song of Life.

[The duke or ruler of a country had a wicked brother who took his throne from him and drove him from his palace out into the forest. Many of his nobles followed him and they lived in the forest passing their time in hunting the wild deer and talking pleasantly together and singing Songs. One day one of the lords sang a sang about the different kinds of pain that men have to suffer. He sang about the bitter wind that blew on them in the forest and the frost that chilled them but he also sang that man suffers not so much from the weather as he does from the unkindness of his friends. Ingratitude and benefits forgot are worse than wind and frost. Therefore the forest life in which they all lived lovingly together was a happy one although at times they suffered from the weather. You can now read his song which you will find if you look for it in Shakespear's play, "As you like it." The holly is a tree which keeps its dark green leaves all through the winter when most of the trees are bare and therefore seems to care nothing for the weather.]

† தறிமரத்தில் கட்டிய யானை
‡ எரியுமிழும் விழிபார்வையுடைய புலி.
* I fear not thunderbolt from out the cloud.
மஞ்சு = ஆகாயம். உருமும் = உருமுமின்றஇடியும்.

† நேரே சென்று பாயும் அம்பு.

I

"Blow blow thou winter wind
Thou art not so unkind
As men's ingratitude;
Thy tooth is not so keen
Because thou art not seen
Althrough thy breath be rude
Heigh ho! Sing heigh-ho! unto the green holly;
Most friendship is feigning most loving mere folly,
Then heigh-ho! the holly
This life is most jolly."

II

"Freeze, freeze thou bitter Sky
Thou dost not bite so nigh
As benefits forgot
Though thou the waters warp
Thy sting is not so sharp
As friend's remembered not
Heigh-ho Sing heigh-ho unto the green holly
Most friendship is feigning most loving mere folly,
Then heigh-ho the holly
This life is most jolly."

## "ஈதென்ன நேசமோ கனமோசமோ!"

——:-:——

"அன்பும்சிவமும்இரண்டென்பர்அறிவிலார்
அன்பேசிவமாதாருமறிகிலார்."—திருமந்திரம்.

"ஓங்காரியென்பாளவளொருபெண்பிள்ளை
நீங்காதபச்சைநிறத்தையுடையவள்."---திருமந்திரம்.

பல்லவி.

ஈதென்னநேசமோ கனமோசமோ!

அனுபல்லவி.

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

கண்ணிகள்.

1. பச்சைப் பாலனவன் பூல்மன மருவாயன்
கொச்சை வார்த்தையால் குணம்பல பேசுவன்
அச்சம் விட்டவ ஞர்வம் நிறைந்தவன்
குச்சைக் கொளுத்திய குணக்கேடன் பாரே!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்ன வேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

2. லஜ்ஜை கெட்டவன் லக்ஷியத்தைக் கொன்றவன்
மஜ்ஜை மாய்சக்ர மதுவுண்ட போதையன்
ரஜ்ஜைக் கண்டாம் ா! அரவென் றலறுவன்
லஜ்ஜைவிட் டெ ம் சாகவே பேசினன்பாரே!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

3. உள்ளஞ் செத்தவன் கள்ளமே செய்தான்
மெள்ள வந்தேயென் னுள்ளம் புகுந்தான்
குள்ளனைப் போலவன் கள்ளத் தனஞ்செய்தே
பள்ளிப்பய லம்மன் பாலையை ஏசினன்!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமே!

4. பள்ளிப் பயலம்மன் பாலையை யிச்சித்து
வெள்ளப் பதுமையாய்ப் பூஜிக்க நேசித்தான்
அள்ளிக் கொடுத்தவன் அறப்பிச்சை யிடாயலே
துள்ளிக் குதித்தம்மா! தொப்பென்று விழுந்தான் [பார்!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

5. உள்ளத் துணர்வை யோர்ந்துண ராதவன்
கள்ளத் தனமாகக் கல்விமிகக் கற்றான்
உள்ளப் படத்தொளி ருயர்ப்ரஜ்ஞா பாரமிதா!
கள்ளப்பய லுன்னைக் காட்டிக் கொடுத்தானே!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

6. உம்பர்க்கு மெட்டாத வுயர்ப்ரஜ்ஞா பாரமிதா!
வம்பர்க்கு ணட்டாத வாலைவித்தை யம்பிகைநீ!
நம்பர்க்கு நாணாதே நாமகள்சி லம்பொலிக்க
வம்பர்க்கு எட்டாதே வந்திடுவாய் வாதேநீ!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

7. வேசைய ருறவென்ன ஆசையி லழுந்தினன்
காசையே பெரிதென்று காமத்தி லழுந்தவே
ஓசையே பெரிதென்று ஓமவென் றோதவும்
வீசையை முறுக்கியே போபோ வென்றனன்!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

8. போபோ வென்றான் போக்குவர வற்றானைப்
போபோ வென்றான் பொய்மலி வேதியன்
போபோ வென்றான் போங்காலம் வந்ததாற்
போபோ வென்றான் போய்வரக் காண்பாயே!

—ஈதென்னநேசமோகனமோசமோ!

அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

9. ஊர்பேர் நச்சியே ஊத்தைவாய் திறந்தவன்
ஊர்பேர் நச்சியே உன்மத்தம் பேசினன்
ஊர்பேர் வேண்டேன் உற்ருரை வேண்டேனன்
ஊர்பேரில்லாஉண்மைக்கரசேயுன்னடிதந்தாளே!
—ஈதென்னநேசமோகனமோசமோ!
அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

10. தர்மம் தலையெடுக்க வேண்டும்!
வர்மம் தலை சாய வேண்டும்!
சர்மம் வந்து சூழ் வேண்டும்!
மர்மம் வெளியாக வேண்டும்!
—ஈதென்னநேசமோகனமோசமோ!
அம்மா! இஃதென்னவேஷமோகனதோஷமோ!
வேறென்னபாசமோபடுநாசமோ!

---

சதிமோசஞ்செய்தவன்மதிமோசம்போனன்
மதிமோசம்போனவன்கதிமோசம்போவான்
அதிமோசம்செய்தவன்அதோகதியாவான்
மதிமோசஞ்செய்தாலும் † ரதிமோசஞ்செய்யாதே!

நேசமோசகோசபாசநாசமாயநமோநமஃ
மோசநேசபாசகோசமாயநாசநமோநமஃ
ஆசுசமோசவேசைநேசஓசைநாசநமோநமஃ

குமருகுருபராநந்தன்.

:(*):

## Change of Government.

## கவர்ன்மெண்டு மெம்பர்கள் மாறுபாடு.

இந்த மார்ச்சுமீ 13உ கூடிய சட்ட நிரூபண சபையில் கனம் லார்ட் கார்மிகேல் அக்கிராசனம் வகித்து சபை நடபடிக்கைகளை நடத்தி முடிந்தபின் அடுத்த ஏப்ரல்மீ 2உ கூடும் சட்ட நிரூபண சபை மீட்டிங்கில் தான் இருக்கமுடியாமல் நேரிடுமென்றும், கனம் ஸர் மர்ரே ஹாமிக் அவர்கள் அவருக்கு பதிலாக கவர்னர் ஸ்தானத்தை வகித்து அக்கிராசனதிபதியாக விருப்பாரென்றும் சொன்னர். இந்த மாசக் கடைசியில் கனம் கவர்னர் இவ்விராஜதானியை விட்டு வங்காள இராஜதானிக்குப் புதிய கவர்னராகப் போகிருரென்று உலாவிய சமாசாரம் மெய்யென வேற்பட்டது. பலர் வங்காள இராஜதானிக் கவர்னர் ஏற்பாடு அமுலுக்குவர பார்லிமெந்து சபையார் அனுமதி வேண்டுமாதலால், இந்திய கவர்ன்மெண்டு ஆக்ட்டு சீர்திருத்தப் படுகிறவரையில் வங்காளத்து கவர்னர் ஏற்பாடு அமுலுக்கு வருவது ஸாத்தியமாயிராது என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள். அதெல்லாம் பொய்யாகப் போய்விட்டது. கவர்னர் இந்த மாசக் கடைசியில் இவ்விராஜதானிக்குப் போகிருர். புதிய கவர்னர் லார்ட் பென்டலாண்டவர்கள் வருவதற்கு இன்னும் 6-மாசம் செல்லும். அதுவரையில் ஸர் மர்ரேஹாமிக் கவர்னராக வேலைபார்த்து வருவார். இவர் மிகவும் நல்லவர். சாந்த குணமுள்ளவர். நல்லபேர் வாங்கினவர். இவருக்கு 6-மாசகாலம் கவர்னர் வேலைபார்க்கும்படி நேரிட்டது இவரைச் சேர்ந்த எல்லாருக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கும். ஜனங்களுக்கும் சந்தோஷம்தான். ஆனல்இவர், 6-மாசம், புதுகவர்னர்வருகிற வரையில்தான் அந்த வேலையி லிருப்பாராதலால் புது ஏற்பாடுகள் ஒன்று செய்ய சாத்தியப்படாது. லார்ட் கார்மிகேல் போன மார்ச்சுமாசம் வர முடியவில்லையென்று ஸர் ஆர்தர்லாலி 7-மாசகாலம் அதிகமாக கவர்னராயிருந்தார். லார்ட் கார்மிகேல் வந்ததும் டில்லிதர்பார் அமளியில் ஒன்றும் செய்ய சாத்தியப்படவில்லை. டில்லியிலிருந்துவந்ததும் இவரை வங்காளத்துக்குக் கவர்னராகத் தெரிந்தெடுத்திருக்கிறதாகச் செய்திவந்ததால், இவரும் அடுத்து நிரந்தரமாக நியமிக்கப்படுகிற கவர்னர் வருகிறமட்டும் ஒன்றும் செய்யாது துரைத்தனகாரியங்களை ஏதோ ஓட்டிக் கொண்டு வரும்படி நேரிட்டது. இப்பொழுது இன்னும் 7-மாச காலத்துக்கு இவ்விராஜதானி பாடு திரிசங்கு ஸ்வர்க்கமாக நிற்கும். பிறகு புதிய கவர்னர் வந்தபின் ஒரு வருஷத்துக்கு மேல் அவர் அனுபவம் பெறுகிறவரையில் வழவழா வென்றுதானிருக்கும். இப்படியாக மூன்

† cf. "Beauty is Truth, Truth is Beauty That's all
Ye know and all ye need to know."

றுவருஷ காலத்துக்கு இவ்விராஜதானி துரைத்தனம் இப்படி தடுமாட்டமாக விருப்பது சுகிர்தமல்லவென்று பலர் அபிப்பிராயப் படுகிறார்கள். ஊருக்கிளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி யென்கிற பழமொழிப்படி இச்சென்னை இராஜதானி மற்ற இராஜதானிகளெல்லாவற்றிலும் இளைக்காரமாக நடத்தப்படுவதாகப் பலர் முறையிடுகிறார்கள்.

புதிதாய் வருகிற கவர்னர் மிகவும் நல்லவரென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். லார்ட் கார்மிகேல் அவரைப்பற்றி மிகவும் மெச்சிப் பேசினார். அவர் மிகவும் அனுதாபமுள்ளவராயிருப்பரென்று சொன்னார். பலர் அவர் லார்ட் கார்மிகேலுக்கு ஈடாகமாட்டாரென்கிறார்கள். வங்காளத்து கவர்னர் வேலையை முதலில் அவருக்கு அளித்தார்களாம். அவர் வேண்டாமென்று சொல்லி விட்டதன்மேல், லார்ட் கார்மிகேலை அந்த வேலைக்கு நியமிக்கும்படி நேரிட்டதாம். லார்ட் பென்ட்லாண்ட், பிரபுப்பட்டம் பெறுமுன் காப்டன் ஸின்க்ளேர் என்னும் பேர் வகித்திருந்தவர். இவர் லார்ட் அபர்டீன் அவர்களுடைய குமாரத்தியை விவாகம் செய்து கொண்டிருப்பதால் தான் இவருக்கு ஆங்கிலேய மந்திராலோசனை சபையில் அதிக செல்வாக்குண்டென்று சிலர்சொல்லுகிறார்கள் மந்திராலோசனை சபையில் மெம்பராயிருப்பவர் சாமர்த்திய மில்லாதவராய் இருப்பது துர்லபம். இப்பொழுது எல்லாம் தூரத்துப் பச்சையாக விருக்கிறது. அடுத்த அக்டோபர் மாசக்கடைசியில் அவர் இங்கே வந்து வேலையை ஒப்புக் கொண்ட பிறகுதான் அவருடைய உண்மைக்குணம் வெளிப்படும். அது வரையில் 'எல்லாம் ஈசன் செயல்' என்று நன்மையையே எதிர்பார்த்திருக்க வேண்டியது தான்.

கனம் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்களுக்கு பதிலாக, அட்வொகேட்ஜெனரலாயிருந்த கனம் பழமானேரி சுந்தரப்பய்யர் குமாரர் சிவஸ்வாமி அய்யர் அவர்களை மெம்பராக நியமித்திருக்கிறார்கள். இவர் வேலை ஒப்புக்கொண்டு அதிக சிரத்தையோடு தமது புதியவேலையைப் பார்த்துவருகிறார். இவர் மிகவும் நல்லவர். தப்பு வழிக்குப் போகவேமாட்டார். மிகவும் நிதான புத்தியுடையவர். நிதானம் தப்பாமல் சமரஸபாவமாக எல்லாவற்றையும் நடத்தும் சுபாவ முள்ளவர். இவருக்கு இந்த வேலை யானதைப்பற்றிச் சந்தோஷப்பட்டு நன்றிமுகமன் கூறாதவர்களில்லை. இவர் இந்த உன்னதபதவிக்கு வந்ததைப்பற்றி ஜனங்கள் எல்லாருக்கும் மிகத்திருப்தியே யன்றி வேறில்லை. இவர் கௌன்ஸில் மெம்பரானதைப்பற்றி மனமுவந்து இவருக்கு நன்றிமுகமன் கூறுகிறோம். கவர்ன்மெண்டு சீப் செக்ரிடேரியாக விருந்த கனம் ஸர் எச். ஸ்டூவர்ட் அவர்கள் 4-வது மெம்பர் ஸ்தானத்துக்கு வந்திநக்கிறார். இதுவும் எல்லாருக்கும் சந்தோஷமே.

இது எழுதியானபின் கனம் லார்ட் கார்மிகேல் கடல்மார்க்கமாய் டப்பரின் கப்பலில் மார்ச்சு மீ 29உ வெள்ளிக்கிழமை சாயங்காலம் 5-மணிக்கு சென்னையைவிட்டுப் புறப்பட்டு கல்கத்தாவுக்குப் பிரயாணமாகப்போனார்.

---

## A JOLLY SONG OF LIFET ETERNAL.

### The Resurrection of Public Life.

**"The Grave is not the Goal of Life."**

[My concluding words to you are; Be true to your God true to your Emperor, true to you. country and to yourselves. Follow these precepts and have no fear for the future of your country or of yourselves.—H. E. the Viceroy's Convocation Address to the Graduates of the Calcutta University.

"I am the Life, the Truth and the Resurrection"—Jesus.

I

**The Law of Karma or Action.**

The four-faced lair looks fair with a fool'scap,
But 'e 'as......"Nothing to do with...."says this scrap;
The Seven-dashier who pleads and leads 'll judge
Of accounts rendered by ME his agent nor will he budge
A jot of capital, interest, or profits made,' *aha!*

"Then heigh-ho the holly!
This life is most jolly!"

II

### The Law of Retribution or Reaction.

"One's a fool, other a knave" they all do say ;
"A knave is a knave, but a fool in the hands of a knave
Is equal to a thousand knaves" they also say ;
But a fool and a knave combined with a capital knave
Is more than what the Public can bear or brook !

"Then heigh-ho the holly !
This life is most jolly !"

III

### The Balance or the Child of Light.

I'm true to my God, to my parents and my Emperor true
To my studies and principles I am steadfast truce ;
To my country and my own Self I'm bound to be true !
Nor fear nor frown of man on earth I care, to be true ;
Then why need I fear if Fool Knave & Co. play foul !

Let's sing "heigh-ho the holly !
This life is most jolly !"

* "*Resurrection.*"

* "I am the Life, the Truth and the Resurrection."

—*The Madras Standard.* —*Jesus Christ.*

## அபயாநந்தவாழ்வு.

———:(✻):———

'அச்சந்தவிர்த்தானென்றூதூதுசங்கே
'யம்பலவாணனென்றூதூதுசங்கே
'இச்சையளித்தானென்றூதூதுசங்கே
'இன்பங்கொடுத்தானென்றூதூதுசங்கே
'இறவாமையீந்தானென்றூதூதுசங்கே
'எண்ணம்பலித்ததென்றூதூதுசங்கே
'ஊனேமறிவதென்றூதூதுசங்கே
'உணர்வேபிரஹ்மமென்றூதூதுசங்கே
'நானேயவனுமென்றூதூதுசங்கே
'நானுவதில்லையென்றூதூதுசங்கே!' —

—ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்
[பாள் சரித்திரம்.

'அச்சந்தவிர்த்தான்' அபப வரதன். அச்சம் என்றால் பயம். என்னபயம்? மனிதன் சங்கடப்பட்டு சாகப்பிறந்தவனுதலால் சங்கடத்தைக் கட்டிக்கொண் டழுதழுது சாவதும் பிறப்பதுமாயிருப்பது உண்மை யறிந்தார்க்கு மிகவும் பயத்தைக் கொடுப்பதே. அந்த பயம் நீங்க 'அஞ்சாதே' என்று அபயங்கொடுத்து, ஆத்ம க்ஷணர்த்தம் தன் பாதாம்புஜமே சரணுகத் தந்து வரமுத்ரை யளித்து அம்பலத்தில் ஆடிக் 'கூத்துக்காக்ஷி' தந்த குருபரன் அருள்பெற்றோர்க்குப் பயமேது? யாருக்குப்பயப்பட வேண்டும்? எதற்குப் பயப்படவேண்டும்? உலகம் என்னசெய்யும்? அது எங்கேயுளது? அதன் சக்தியென்ன இவைக்கெல்லாம் உண்மையான மறுமொழி பகர்ந்தால் உள்ளது உள்ளபடி விளங்கும். இந்த விவேகசிந்தாமணி சஞ்சிகையின் மற்றோர் பக்கத்தில் பிரசுரித்திருக்கிற "அச்சப்பத்து"—"அசங்கோகமாதல்' என்னும் விஷயத்தை வாசித்துப்பார்த்தால் அருள்பெற்றோர் அஞ்சுவது உலகத்தார் அஞ்சுமவற்றைக் கண்டல்ல. யமனுக்கும், புலிக்கும், பாம்புக்கும். விஷத்துக்கும், இடி மின்னல் முதலான ஆதிபௌதிகங்களால் வரும் ஆபத்துக்களுக்கும், பசி பிணி, மூப்பு, பிறப்பிறப்பு முதலான ஆதிதைவிக சங்கடங்களுக்கும், காமக்குரோத லோப மோக மதமாச்சரியாதி அத்யாத்மிக தாபங்களுக்கும் அவர்கள் அஞ்சார்கள். பின்னை? அன்பிலாரைக் கண்டு அவர்கள் அகட் நடுங்க அச்சமுறுவதுபோல் வேறு எதையுங் கண்டு அச்சமுறார்கள். அந்த அச்சம் தவிர்ப்பது எப்படி?

மனிதன் சாகப்பிறந்தவனுதலால், சாவுக்கஞ்சி வாழவேண்டும். ஏனென்றால் பிறப்புண்டானல் இறப்பும் உண்டு. இறவாமலிறங்கக் கற்றால் பிறவாமை யென்னும் பெறற்பேறு பெற்றுப் பேரானந்த முறலாம். இறவாமலிறப்பதாவது "ஊனே மறிவதென்றுணர்ந்து" அஃதை விட்டுப் பிரிதலாம். ஊனே மறிவதென்றுணர்ந்த உணர்வு (அறிவு) எதுவோ, அதுவே அஸங்கோகமானவிட்த்து பிரஹ்மாகாரமாக விளங்கும். அதாவது, எங்கும் நிறைந்தாய், எல்லாம் தானாய், ஸர்வாந்தர்யாமியாய் விளங்கும். இறவாமை யின்னதென்றுணரப் பசியா மருந்தளிக்கும் பரம ரகஸியத்தை உள்ளங் குளிர உணர்ந்தனுபவிக்க வேண்டும். "இடறி விழுந்தானை யெட்டியுதைப்பேன்" என்றான் ஒரு மூடன். முதலில் இந்த வார்

த்தை உயிரை வதைத்து உடலைக் கருக்குவதா யிருந்தது. ஏன்? தேஹத்தில் அபிமானமிருந்த தால். இந்த தேஹ அபிமானத்தை யறிந்து களையவும் உயிர்வதைக் காரணமே உண்மைச் சாதனமாக அமைந்தது. அந்தச் சாதனம்பற் றிச் சாதிக்க அதுவே சகஜானந்த மளிப்பதா யிற்று.

"புல்லரிடத்திற்போய் பொருள்தனக்குக் கையேந்தி
பல்லைமிகக்காட்டிப் பறக்க விழிக்கிறேன்'டி!
பல்லைமிகக்காட்டாமல் பறக்கவிழிக்காமல்
புல்லரிடம்போகாமல் என் கண்ணம்மா!
பொருளெனக்குத் தாராயோ!"

என்று சித்தர்வாக்காய்ப் பிறந்த உண்மையைப் பிடித்துத் திரிகரணசுத்தியாய் த்ரியம்பகனுப் ஊபாஸித்து கிற்க இவ்வாத்மனைப்பற்றிய பாவ மெல்லாம் ஒன்றொன்றாய்க் கழன்று விழுந் தது.

"சேபைக் கொண்டுளம் சோதித்தே, மாயே கைபபொருள் கொள்ளைவிட்டாய்!" என்ற தற்கு அர்த்தம் அநர்த்தம் என இரண்டுண்டு. அர்த்தம் என்பது உண்மையான லக்ஷியப் பொருள். அநர்த்தம் என்பது பொய்யான பாவ னப்பொருள். பாவனப்பொருளைப்பற்றி கின்றர் த்தம் செய்தால் அது அநர்த்தம் விளைக்கும். ஏனெனில் "பற்றொன்று பற்றென்று பவோ பவம்!" எண்ண எண்ணப்பற்றுப் பாவும், எண் ணம் பலிப்பது சிந்தை பிறந்தவிடத்திலே யாத லால், எண்ணமெல்லாம் ஈசுவர சங்கற்பமே பலிக்கும். "எண்ணாத எண்ணமெல்லாம் எண் ணிமனம் புண்ணானேன்" என்றபடி வீண் மனோராஜ்ஜியம் செய்வது கர்மத்தை வளர்த்து ருணத்தையே உண்டுபண்ணும். ஆகையால், "எண்ணம் பலித்ததென் றாதூதுசங்கே" என் றால், "ஸத்யமேவஜயதேநாந்ருதம்" "தர்மமே ஜயம்" என்கிற ஸத்பாவனை பலித்தது என்று அர்த்தமேயன்றி ஊர்க்குடியைக்கெடுத்து உண் மைத்துரோகம் செய்து காசையே பெரிசாய் நினைத்து "பார்க்காய்க்குப் பங்கை விற்ற வன் கதையாக" உபநிஷத்துக்களை உண்மையறி யாமல் படித்துவிட்டு குருத்துரோகம் செய்து குடிகெடுக்கும்யோசனை பலித்தது என்று அர்த் தம் செய்யக்கூடாது. அந்த எண்ணம் பலிப் பதுபோல் காட்டிக் கடைசியில் பலிகொள்ளும். ஆகையால் "இஷ்டசித்தி" யென்றால் குடிகெடு க்கும் யோஜனைபலித்தலன்று. "தர்மமேஜயம்" என்ன "தர்மம் வெல்லக்காத்தலே" இஷ்டசித்தி. இந்த இச்சையொன்றே இச்சிக்கத் தக்கதாம். தர்மரக்ஷணம் செய்யவல்லவர்கள் தர்மம் தலை யெடுக்கப்பார்த்து "இச்சையளித்தானென் றா தூது சங்கே!" யென்று சங்கத்துவனிகிளப்பி ஜயபேரிகையடிப்பர். ஏனெனில் "இச்சையளித் தான்" தானே "இன்பங்கொடுத்தான்." தர்மம் ஜயிக்காவிட்டால் இன்பமில்லை. ஸத்யம் பலிக் காவிட்டால் சுகமில்லை. அதர்மமும் அஸத்ய மும் பலிப்பதுபோல் காட்டி சலிப்பைத் தரும். சலிப்புண்டானால் வலிப்புண்டாகும்; வலிப்புண் டானால் அகம் விரியாது குவிந்து குறுகும். அகம் குறுகினால் எல்லாம் குறுகும். அகம் குறுகக்குறுக உள்ளத் துணர்வு கெடும். கம லம் குவிய இருள் மூடுவதுபோல், இருள் கவி யக் கமலம் மூடுவதுபோல், அகம் குறுகினர்க்கு இருளும் மருளும் வந்தடுக்கும். இருள் என்பது புறப்பொருள்: மருள் என்பது அகப்பொருள். அடுத்துக் கெடுக்கிற பாவியைப்போல் அஞ் சத்தக்க பொருள் உலகத்தில் வேறில்லை. இதைத்தான் துச்சங்கம் என்று சொல்லுகி றது. ஸத்ஸங்கம் வேண்டுமானால் துச்சங்கமும் தானேவரும். ஏனெனில் த்வந்தாகாரமான இந்த உலகில், 'ஸதஸத்' இரண்டும் கலந்தே யிருக்கிறது. இந்த உலகம் ஸத்து மில்லை; அஸத்துமில்லை. பின்னை? "ஸத்-அஸத்" என்கிற மெய்யும் பொய்யும் கலந்துண்டானது. மெய்யும் பொய்யும் இணைபிரிந்தால் பிரபஞ்சம் மூழ்கிப் போம். பிரபஞ்சம் மூழ்கிப்போனால் பிரளய காலம் வந்துவிடும். பிரவிருத்திக்கிடமில்லாத

எல்லாம் நிவிருத்தியடைந்து கேவலத்தில் மூழ்கியிருக்கும். நான்முகப் பிரம்மாவும் அப்பொழுது பிரளயத்தில் லயித்துப் போவான். பிரளய ஜலத்தில் விஷ்ணு அம்சம் தோன்றும்; அது க்ஷீராப்தி யென்கிற பாற்கடலாகும். ஜடாத்மகமான நான்முகப் பிரம்மாவுக்கு அங்கே யிடமில்லை. அவனுக்கும் அதற்கும் ஸம்பந்தமில்லை. ஜடமெல்லாம் நாற்கோண்வடிவாயுள்ளது. ஜலமோ அர்த்த சந்தரரூபமா யமைந்துள்ளது. பிரம்மா பிரஜாபதியிவர்களாலே பிரவிருத்திமார்க்கம் ஏற்பட்டு வளருகிறது. சௌனகாதி குமாரர்களால் நிவிருத்தி மார்க்கம் பிரகாசிக்கிறது.

சவக்குழி எப்போதும் ஜடப்பொருளுக்கு அடையாளமாம். அது நான்முகமாய் (நாற்கோணவடிவாய்) இருக்கும். ஸர்வபூத க்ஷயன் ஜடப்பொருளை யெல்லாம் சவக்குழி யாக்குகிறான். இந்த தேஹம் "தேஹோ தேவாலய ப்ரோக்தஃ" என்ற சுருதி வாக்கியப்படி தேவாலயமாகவோ, அல்லது "சவக்குழி" யாகவோ அமையப்பெறும். செத்துப் பிழைத்தார்க்குச் சவக்குழி சமாதியாகும். சாகத்தெரியாமல் சங்கடப்படுகிறவர்களை அவர்களுடைய கர்மம் உள்ள வரையில் தர்மராஜன் அவர்களை யாட்டி வைத்துக் கடைசியில் ஸர்வபூதக்ஷயனாய் நடைப்பிணமான சவக்குழியாம் அவர் தேஹம் நடவாப்பிணமானபின் மண்ணுக்கிரையாக்கி மண்ணோடு மண்ணாய் மடியும்படி சவக்குழியி லடக்கமாக விதிக்கிறான்.

இப்படி நடைப்பிணமான சவக்குழிபோன்ற தேஹமுடைய ஒருவனுக்கு சவக்குழியில் சவமழுகுகிறதுபோல, உள்ளுக்குள் உண்மை குறையக் குறைய, உண்மையுணர்ந்த யோகிக்கு "தர்மமேகம்" உண்டாவதுபோல் உண்மையுணர்விலாத போகியான பாபிக்கு கர்மவியாதி கர்மமேகமாகப் படரத்துவக்கி, நாளடைவில் அது மதுமேகமாக மாறி நீரழிவு வியாதியைக் கொணர்ந்து விடுகிறது. "ஜூடாஸ் இஸ்கேரியாட்" என்னும் பேர் "யேசுகிறிஸ்து" என்கிற பேருள்ளமட்டும் உலகத்தில் நீடித்திருக்கும். அவன் யதிநேசம்செய்து பின் கனமோசம் செய்ததால், மதிமோசம் போயவன் கதிமோசமானான். அவன் பேரும் அபவாதத்துக்காளாயிற்று. இதெல்லாம் கர்ம பலன்.

இந்த வினைப்பயனை யெல்லாம் திரட்டி யொருவர் தம் ஆத்மானுபவத்திலிருந்து இங்கிலீஷில் ஒரு பாட்டுப் பாடியிருக்கிறார். அதன் பொருள் சாமானியர்க்கு உள்ளது உள்ளபடி விளங்குத லரிதாயினும் தத்துவார்த்த முணர்ந்தவர்களுக்கு வெள்ளிடை மலைபோல் விளங்குவதா யிருக்கிறது. அதன் உள்ளக்கருத்து இது:

அபயாநந்தவாழ்வு

பண்.

"ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம் !
ஆனந்தம் ஆனந்தம், ஆனந்தம் வேறில்லை !"—

—ஆனந்தத் தாய்மொழி.

I. வினைவழி The Law of Karma.

நடைப்பிணமானார் சவக்குழியாவார்
கடைப்பிடியில்லாக் கயவர்க்சழகிது !
கொடைநலமில்லாக் குணக்கேடரம்மா !
கடைமுதல்கொள்ளும் சவக்குழிநாண்டார் !
சடைமுடிவேணியன் 'ஜகதேகச்சக்ஷுஸன்'
நடையிடைத்தோன்றிய நாசகாலாந்தகன்
கடையிடையடியென்னும் காலம் மூன்றிலும்
தடைமடை பாரான்கர்மக் கணக்கையே இறுப்பன்!
"ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம் மிவ்வாழ்வு
ஆனந்த மெனக்கட் யானந்த வாழ்வெனப்பாடே !"

II. வினைப்பயன் The Law of Retribution.

"அறிவிலாதுலகம் குருவிலாதசுரம்" என்பதுகுரு
[மொழி !
"குறியிலா குணக்கேடன் குருவில்லையினும் ஒரு
[வனே யாவன்;
"அறிவிலானொருவன் குருவிலான் வசப்பட்டால்ஐய
[கோ ! அவ்
வறிவிலா ஒருவனே யாயிரம் குருவிலா அசுரர்க்கொ
[ப்பாவன் !"
அறிவிலாஒருவனை குருவிலா அசுரன் கூடிக்குலவ
நெறியிலாத் தலைமகன் நகைமுகங் காட்டியோர்கண்ணில்
செறிவிலாச் செகமெலாம் நெறியிலா தொழுகுமால்
அற்குறிநெறியிலாக்குழுவினர் குலமறும் காலனாலே!

"ஆனந்தம் ஆனந்தம் ஆனந்த மஞ்ஞானம்!
ஆனந்தத்தாய்தந்த தபயா நந்தவாழ் வெனப்பாடே!"

### III. வினையறுத்தல் The Balance or The Child of Light.

உள்ளது மொன்றே உண்மையு மொன்றே
உண்மைக் கரசே உன்னடி சரணம்!
நல்லது மொன்றே நன்மையு மொன்றே
நன்மைக் கரசே நின்னடி சரணம்!
பிள்ளையு மொன்றே பெற்றவ ளொன்றே
பிள்ளைக் கம்மையாம் அப்பனே சரணம்!
கொள்ளையு மொன்றே கொள்முத லொன்றே
கொள்ளைக் கிலக்காம் கோவே சரணம்! †

சள்ளையுமொன்றே சச்சரவொன்றே
சச்சரவறுக்கும் சாக்ஷியே சரணம்!
உள்ளதைச் சொன்னேன் பிள்ளையைக் காத்தருள்
உள்ளதுமில்லது மானாய் சரணம்!
கொள்ளையோ கொள்ளை! கூ! கூ! கொள்ளை!
கொள்ளைவிட் டென்னைக் காப்பாய் சரணம்!
உள்ளதே யில்லது, மில்லதே யுள்ளதும்
உள்ளத்துறையும் உணர்வே சரணம்!

"ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தஞ் சகவாழ்வு
சகஜாநந்தமே யபயாநந்த வாழ்வெனப் பாடுதும்
[வாரீர்!

———▸◆◂———

## "The Cinderella of the Empire"

### To H. E. Lord Carmicheal, "Her Prince!"

"MADRAS IS BECOMING THE CINDERELLA OF THE EMPIRE."—*Press cutting.*

### "Hymns to the Guardian Spirit."

I

"Hail! Spirit, Source to me of all life's joys!"
Arise! the darkest hour of Night has fled;
The earliest hour of Dawn is come!
And with it the Light of Public Life!

II

"Darkness and Dawn!" was once the burden of my song!
"The darkest hour has its dawn!" was then my only hope!
Arise, Awake! Lo! the Sun has neared the Eastern bound!
Darkness departs and Dawn broadens out 'nto boundless Day!

III

Deeds done in selfishness, Ignorance or worse;
Must hide their heads afore the piercing Light of Day or Duty clear!
Words spoken in the privacy of darkness must
Force their way to public life afore thy presence!

IV

Hail! Spirit, the Hour is come! the Harbinger of Light
Has touched the land and tinged the life with Golden rays
Of Sympathy, Hope and Sustained efforts
To *resurrect* the Life that self-interest *did crucify!*

V

Carmichael "my Prince,"s going, but his spirit abides!
And the Spirit of Public Life now touched to the quick
By his sympathetic hand must needs arise!
Awake! Spirit, FROM OFF THY COUCH IN GRACE ARISE!

VI

Sordid men with selfish aims to power and pelf
Have found their way in the Darkness of Night
By the glittering light of wealth ill-got, or
By hair-splitting ways and fair-seeming 'deal' with Public Life!

—*From the "The Rousing of Public Spirit."*

### பொதுப்பள்ளி யெழுச்சி (வாக்குச்சுத்தி).

(ஸ்ரீமாணிக்கவாசகர் திருவடிபோற்றி,)

" போற்றி!என் வாழ்முதல் ஆகியபொருளே!
புலர்ந்தது, பூங்கழற் கிணை துணை மலர்கொண்
" டேற்றி, நின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்!"
போற்றி!எம் மிதயகமலத் திருந்தெழ சிற்றம்
பலநடுவாடும் பொதுஜன வாக்கே! வாணீ!
மாற்றுயர் வீணாநாதத் துவனிசெய் யிருகைக்
கிடையுறை வாக்கே! பொதுப்பள்ளி யெழுந்
[தருளாயே!

### கார்மிகேல் பிரபுவின் பிரிவாற்றாது சென்னைமாதேவி யிரங்கல். *

———:-:———

பல்லவி.

ஊர்போகலாமோ! உத்தமதுரையே!

அனுபல்லவி.

பார்மீதெனையிங்கேபஞ்சையாவிட்டுமே
ஊர்போகலாமோ! உமக்கழகிதுவோ!

கண்ணிகள்.

(1) கார்மிகேல்பிரபுவே கருணாரஸமே!
ஊர்மிக்கப்பேசும் உத்தமதுரையே!
பார்மீதெனையாளப் பணிபூண்டைய!
சார்பிலாதெனைவிட் டோர்பலபேச—ஊர்போக
[லாமோ! உத்தமதுரையே!

பார்மீதெனையிங்கே பஞ்சையாவிட்டுமே
ஊர்போகலாமோ! உமக்கழகிதுவோ!

---

† c-f. The Heaven often suffereth violence, for the Violent take it by force.

* Advance proof of this was forwarded to His Excellency. (Who was learning Tamil) on the cue of his departure from Madras.

2 ஊர்போகநீரும் உன்னித் துணிந்தீர்
சார்பிலாப்பெண்ணெனச் செகமீதெனைவிட்டுப்
பார்மன்னரென்னைப் பஞ்சையாகினைக்கவும்
பேர்பலபேசும் பாவியர்பலரேச.....
—ஊர்போகலாமோ! உத்தமதுரையே!
பார்மீதெனையிங்கே பஞ்சையாவிட்டுமே
ஊர்போகலாமோ! உமக்கழிகிதுவோ!

3 சீரில்லைசிறப்பில்லை சிறுதாய்ப்பணியில்லை
ஊரில்லைபேரில்லை உள்ளத்துணர்வில்லை
நேரில்லைநெறியில்லை நேர்நிறைதானில்லை
சீரிலாநெறியிற் சிதறவிட்டென்னை......
—ஊர்போகலாமோ! உத்தமதுரையே!
பார்மீதெனையிங்கேபஞ்சையாவிட்டுமே
ஊர்போகலாமோ! உமக்கழகிதுவோ!

4 கடமையைச்செலுத்தநீர் கடல்வழிபோ'றீர்
உடைமையைக்கொடுத்துநா னுழலுகிறேனிங்கே!
மடைமையருறவிலே மாண்பில்லை மதிப்பில்லை
கடையினருறவினல் கதியிழந்தலறநான்......
—ஊர்போகலாமோஉண்மைத்துரையே!
பார்மீதெனையிங்கே பஞ்சையாவிட்டுமே
ஊர்போகலாமோ! உமக்கழகிதுவோ!
—உத்தமதுரையே! ஊர்போகலாமோ!

5 திருமயிலண்டத்திருந்ததுபோலந் திருவாக்கெழுந் [தது
அருங்குயில்கூவியதிருமறைபோலு மிசைந்தது [மத்திமை
குருவழிவந்த 'ஒருமொழி' யன்னக் குவிந்தது [பொதுமனம்
வருவழிகாட்டுந்திருமொழியன்ன வரைந்ததுவை
கரி!—ஊர்போகலாமோ! உத்தமதுரையே!
பார்மீதெனையிங்கே பஞ்சையாவிட்டுமே
ஊர்போகலாமோ! உமக்கழகிதுவோ!
—உண்மைத்துரையேகேண்மைக்கரசே! ஊர்போக [லாமோ!

(6) "தொழிலாளிகாள்நான்போய்வருகிறே"னென் [றே
மொழிதமி ழுரைசெய்யக் கற்றவென் துரையே!
பழிமொழிக் காளாய்ப் பாரிலெனைவிட் டேகுத [லாகிய
இழிமொழி யிதுவோ உன்வாய்வழி வரவேண்டும்!
—ஊர்போகலாமோஉண்மைத்துரையே!
பார்மீதெனையிங்கே பஞ்சையாவிட்டுமே
ஊர்போகலாமோ! உமக்கழகிதுவோ!
—உத்தமதுரையே! ஊர்போகலாமோ!

ஸ்ரீராமநவமி }
27—3—12 } சென்னைமாதேவி.

## Chingelput Dt. Co-operators' Conference.

"செங்கற்பட்டு ஜில்லா கொவாபரேடர்களின் மகா ஸபை."

———:(*):———

இச்சபை 1912-ம்ஹூ மார்ச்சுமீ 25-உ திங்கட்கிழமைதினம் சென்னை கிறிஸ்டியின் கலாசாலைக்கடுத்த ஆன்டர்ஸன் ஹால் என்னும் ஸபாமண்டபத்தில் கூடியது. பரஸ்பரோபகாரக் கூட்டுநிதிச் சீங்கங்களில் ஆர்வங் கொண்டவர்களும் ஐக்கிய நாணயம் விருத்தி யாகவேண்டுமென்ற அபிலாஷை யுடையோரும் இன்னும் ஏழைகளுக்கு அதி யுபயோகமாயுள்ள இந்த கூட்டு நிதிச்சங்கங்கள் செழிப்படைய வேண்டுமென அவை மீது பூராவான அபிமானம் வைத்தவர்களும் விஜயம் செய்திருந்தார்கள். தஞ்சாவூர் திருச்சி, சேலம், கோயம்புத்தூர் முதலான ஜில்லாக்களிலிருந்து கூட்டுத்தொழிற் சபைப் பிரதிநிதிகள் பலர் வந்திருந்தனர். இதல்லாமல் அனேக கனதனவான்களும் வந்திருந்தனர். இதை ஐக்கியநாணய மாகாணசபை யாக்குமிடத்து மிகவும் நன்றாயிருக்கு மென்பது பலபேரது துணிபு. ஒரு ஜில்லாவின் பெயரைமட்டும் குறிப்பிட்டு வைக்காமல் பொதுவாக ஐக்கிய நாணயமாகாண கான்பரென்சு என்று பெயர் வைத்து பிரதி வருஷத்திலும் இவ்விராஜதானியைச் சேர்ந்த முக்கியமான விடங்களில் மீடிங்குகூடி இது முதன்மையாகும்படி செய்தால் கூட்டுத்தொழில் மிகவும் செழிக்கும் என்பதை யாம் சொல்லவேண்டுவதில்லை. இதை ஐக்கியநாணயச்சங்க ரெஜிஸ்ட்டிராரான திவான்பகதூர் எல்.டி. சுவாமிக்கண்ணு பிள்ளையவர்கள் குறிப்பிட்டுப்பேசி அம்மாதிரியான மாகாணசபைக்கு இதுவே யாரம்பமென்று கூறினார். இதல்லாமல் இந்த ஸபை மற்றொரு பாக்கியத்

தையும் அடைந்த மகாசபையுமாயிற்று. சாதாரணமாயிருக்கையிலேயே 'ஐக்கிய நாணய சம்பந்தமான எம்முயற்சிக்கும் ஸர்வஜன சம்பந்தம் ஏற்படுவது ஒரு புறமிருக்க, மற்றொரு புறத்தில் 'உழுதுண்டு வாழ்வார்க்கு ஒப்பில்லை'யென்று நம்மூதோர் கூறிய வார்த்தையை யனுஸரித்து வேளாண்மை செய்து 'பிழைப்பதையே பெரும்பாரமாய் வகித்த குடிகள் நிரம்பிய இம்மாகாண ஐக்கிய நாணயஸ்தர் நிரப்பிய இச்சபைக்கு ஜனாபிமான மிகுந்த கவர்னரவர்கள் அக்கிராசனம் வகித்திருந்தனர் என்றால் இந்த ஸபையின் ஆவசியகம் எத்தன்மையதென்று நாம் சொல்லவேண்டுவது அனாவசியம். கவர்னரவர்கள் தமக்குப் பற்பல காரியங்கள் இப்போது முன்னிட்டிருந்தாலும், தாம் இம்மாகாணத்திலிருந்து வெளிப்புறப்பட்டுப் போருமுன் ஐக்கியநாணய ஸபையைப்போன்ற பெருத்த முயற்சிகளில் தாமும் ஒற்றுணர்ச்சி கொண்டிருப்பதைத் தெரிவிக்கவேண்டியே இம்மகாஸபையின் அக்கிராஸனாதிபத்தியத்தைத் தாம் அன்று வகித்து நடத்த இசைந்ததாகவும், மற்றெப்பாகத்தைக் காட்டிலும் இவ்விராஜதானியில் பரஸ்பரோபகாரச் சங்கங்கள் பெரிதும் விருத்தியாய்க்கொண்டு வருவது தமக்கு அத்யந்த திருப்தியைக் கொடுக்கிறதென்றும், இச்சபையார் செய்யும் முயற்சிகளாலே சிக்கனம் அல்லது செட்டாய்ச் செலவிடுவது, தன்முயற்சியினாலே பாடுபடுவது, ஒருவருக்கொருவர் நம்பிக்கை கொண்டிலங்குவது, சொல்பவட்டிக்கு ஏழைவிவசாயிகளுக்குக் கடன்கொடுப்பது, மொத்தமாய்ப் பணஞ்சேர்த்துத் தன் தொழிலை நடத்தமுடியாத் எளியோனை அவன் தன் சொந்த உழைப்பினாலே பாடுபட்டுப்பணம் சம்பாதிக்கும்படி செய்து அவனை முன்னுக்குக்கொண்டு வருவது, ஆகிய இவையனைத்தும் பரஸ்பரோபகாரக் கூட்டுச்சபைகளால் உற்பவிப்பதாகுமென்று அனுபவரீதியாய் எவரும் கண்டுகொள்ளலாமென அவர் சொல்லிமுடித்தார். பிறகு ஐக்கிய நாணயச் சங்க ரெஜிஸ்ட்ரார் எழுந்து இது மாகாண ஸபையல்லாது செங்கற்பட்டு ஜில்லா ஐக்கிய நாணய ஸபைகளின் நான்காவது கான்பரென்ஸாயிருந்தாலும், ஜில்லாவிலுள்ள சங்கங்களின் பிரதிநிதிகளும், ஸென்ட்ரல் பாங்கிகளின் காரியதரிசிகளுட் பலரும், மற்றும் இவ்விஷயத்தில் அபிமானங்கொண்ட பலரும் விஜயம் செய்திருப்பதனாலேயே இதையொரு பொதுவான ஐக்கியநாணய மாகாணஸபையெனச் சொல்லலாமென்றும், இது செய்துவரும் பகீரதப் பிரயத்தனங்களுள், இம்முயற்சியினாலேற்படும் ஒப்புயர்வற்ற பெரும்பலன்களை அதிகப்படிப்பில்லாத ஜனங்கள் அறிந்து அது காரணமாகத்தாம் பலனடையும் வண்ணம் பரஸ்பரோபகாரக் கூட்டு நிதியார் செய்யும் வேலைகளையும், அவைசட்டுகந்த மூலாதார விதிகளையும் அவ்வெளியோர் மனத்திற்பதியும்படி தேசபாஷைகளிலேயே துண்டுப் பத்திரிகைகள் மூலமாயும் பதியும்படி செய்தாலது காலக்கிரமத்தில் மிகுந்த பிரயோசனத்தைக் கொடுக்காமற் போகமாட்டாதென்று அபிபிராயப்பட்டுப் பேசினது நமக்கு மிக்க மகிழ்ச்சியைத் தருகின்றது. அனேகம் பேருடைய நல்லுணர்ச்சி இதற்கு மிகுந்திருப்பதனாலே சங்கங்கள் விருத்தியடைய அடைய நன்மையும் விளைந்துகொண்டே வருமென்பது எமது துணிபு. ல. ஆநந்தய்யர்.

—(-)—

## "AS YOU LIKE IT"

## 'உன்னிஷ்டப்படியே'

—:-—

இத்தலைப் பெயர்கொண்ட நாடகத்தை ஆங்கில பாஷையில் அனேக நாடகங்களை யியற்றி, ஒப்புயர்வற்ற மெய்ப்புலவரென்று பலராலும் புகழெய்திய வில்லியம் ஷேக்ஸ்பியர் இங்கிலீஷில் முறையே யெழுதி யிருக்கிறார்.

இதை ஸ்ரீமத் செய்யூர் முத்தய்யா முதலியாரவர்கள் 'சேர்ப்பனசேர்த்துக் கழிப்பன கழித்துத்' தமிழ் நாட்டிற்குரியவாறு தர்ஜமாசெய்து, அதற்கு ராஜராஜேசுவரி என்று பெயருமிட்டு நாடகரூபமாய் வெளிக்கொணர்ந்திருக்கிறார். இச் சென்னை ராஜதானியின் தென்பாரிசத்திலுள்ள எட்டயாபுரம் சமஸ்தானத்திலிருந்துதற்போது ஸ்ரீ ஷண்முகவிலாஸ ஸபையர் சென்னைக்கு விஜயம் செய்திருக்கிறார்கள். அவர்கள் ஸமீபத்தில் நடித்த ராஜராஜேசுவரி அல்லது 'உன்னிஷ்டப்படியே' என்னும் நாடகத்தைப்பற்றி இரண்டொருவார்த்தை சொல்லாமலிருக்க முடியவில்லை. ராஜதானியின் தலைநகராயுள்ள சென்னையைப்போன்ற பெரும் பட்டணங்களுக்கு இச்சபையார்வந்து நடிப்பது இதுவே முதற்றடவையானாலும், எந்த போதகாசிரியரிடம் இவர்கள் அரங்கஸ்தானப்பயிற்சி யடைந்தார்களோ, இவர்கள் நடிப்பதிலிருந்து உற்பவிக்கும் குணதோஷங்கள் இவர்களைப் பயிலுவித்த எந்த ஆசிரியரிடம் போய்ச்சேருமோ, நாடகத் தலைவியாய் நடிப்பதில் நிகரற்ற சாதுர்யங்காட்டி நன்னகர் முழுவதும் நற்பெயரெடுத்து விளங்கும் நாடகேந்த்ரர் எவரோ, அப்படிப்பட்ட கீர்த்திவானான ஸ்ரீமான் வி. எஸ் கல்யாணராமய்யர் அவர்களிடம் தயாரான சிறுவர்களன்றோ இவர்கள்? ' தாயைப்போல பிள்ளை, நூலைப்போலச்சேலை" யென்றொரு பழமொழியுண்டு. அதற்கேற்ப இச்சபைமெம்பர்கள் ஆடும் ஆட்டங்களில் இதற்குமுன் யாம் பார்த்தனுபவித்த ஸ்ரீமான் ஐயரவர்களின் சொந்த ஸபையை யணுகியதாகவே தோற்றுகின்றது. நிற்க. சிலதினமுன் இவர்கள் ஆடிய ராஜராஜேசுவரி என்னும் நாடகத்தைப் பொறுத்தமட்டில் முக்கியமாய்ச் சொல்லவேண்டிய அம்சம் ஒன்றுண்டு. நாடகத் தலைவியான ராஜராஜேசுவரி வேடந்தரித்து வந்த சுப்பராயன் என்ற வாலிபன் அன்று நடித்த நடையும், பேசிய பேச்சும், புரண்டழுத பிரலாபமும், தனதின்னுயிர்க்காதலனை அருளாநந்தன் உயிர் பிழைத்தான் என்ற பின்னர் அடைந்த சந்தோஷமும், பெண் உடையன்றி ஆண் உடை தரித்தபோதும் தெற்றெனப் புலப்பட வேஷப் பொருத்தமும் மிக்க திறமாகவே யிருந்தன. ஒருவர் நாடகமேடையில் வந்து நடிப்பதென்றால், ஸபைக்கோழையில்லாமலும், எந்த பாத்திரம் தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அதற்குரியவாறாய் அனுபவித்தும் நடிக்க வேண்டும்; குருத்துவம் என்ற மனோபாவமிருந்து, அஹங்காரம் எனும் ஆசங்கை யழிந்து, எந்த பாத்திரமாய்த் தான் மேடையில் வந்திருக்கிறானோ உண்மையில் அந்தப் பாத்திரமே தான் என்று மதித்து கரகோஷத்தையும் கண்டோர் சிரிப்பையும் கவனியாது நடித்தல் வேண்டும்; அப்போதுதான் அவர்கள் பெயர் சிறக்கும். இப்போது இராஜ ராஜேச்வரியின் பெயர் சிறப்புற்றிருந்தது என்று நாம் சொல்லும்போது, அவ்வேடம் பூண்டுவந்த வாலிபன் எவ்விதம் அரங்கஸ்தானத்தில் ஐயரிடம் தான் பயிற்சியடைந்ததைப் பிரகாசிக்கச் செய்திருக்க வேண்டுமென்பதை யாம் இன்னும் விவரிக்க வேண்டுவது அனாவசியம் போகப்போக "இவ் வாலிபன் நல்ல விருத்திக்கு வருவானென்பது எமது துணிபு. ராஜராஜேஸ்வரியின் தமக்கையாய் வேடம்பூண்ட சாலியப்பன், அமுதவசனனாய் வந்த பொன்னுசாமி, அருளானந்தனாய் வந்த முத்தையா, இவர்களுடைய நட்டத்தில் குணதோஷங்கள் சொல்வதற்கில்லை. பின்னும் இச்சபையாரது சித்திரத் திரைகள் நிரம்பமாயிருக்கின்றன. காட்சிகள் ஒவ்வொன்றும் மிக்க மதியூகத்துடன் ஜோடிக்கப்படுகின்றன. இதுகளைக் கவனிக்கும் பார்பூஜி என்ற சித்திரக்காரருக்கு இச்சபையார் கடமைப்பட்டிருக்கிறார்களென்றே சொல்லவேண்டும். இப்படிப்பட்ட ஸபையினை ஆதரிப்பது மகாஜனங்கள் முழுமுதற் கடமையென்போம்.

———:o:———

4-13

(1901-1912.)
Ananda Mission Founder's Day.
The Twelth Arudra Celebration.

AUM.

Our Motto:
"Hitch your wagon to a Star" and
"Let the Current that knows its way."

**"Our Theism is the purification of the Human Mind." Our Method: "Satyam Vada!"-Dharmam Chara!'**

# THE TRUTH BEHIND THE CORONATION DURBAR.

**"The Kingdom of the World is become the Kingdom of our Lord and of His Christ."**

## "THE MISSION OF THE EMPIRE AND THE WORLD."

**" Here then lies the work of our Empire in the coming years " and of**
**THE ANANDA MISSION WHICH AIMS AT REALISING THE PERMANENT VALUE**
**Of Any Empire or Any Social Institution by making real and effective in the World**

## "THE IDEAL OF BROTHERHOOD" OR "CHRISTLY LOVE"

*—The Paramkarunai which feeds on and grows Perfect by "Neighbourly Love" or Jeevakaruniam.—*

**"LET US NOT FORGET"**

**"That the achievement of this great end does not lie merely with statesmen and politicians,**
**"but Far More with the Ordinary People in the Ordinary Routine of Daily Life."**

" Life is real, Life is earnest;
And the grave is not its goal."

IT was a splendid service which the Bishop of Madras rendered to the cause of truth and the coming of the Kingdom of God, in the impressive sermon, which he preached to the world from the Coronation Durbar Camp on Sunday last. (10th Dec.) The Truth behind the Coronation Durbar is that "the Kingdom of the World is become the Kingdom of Our Lord and of His Christ." The Lord Bishop said that he spoke only as the representative of the Christian Community in India, but every community and every religion will admit the Truth behind the Coronation Durbar in the text which he took up for his sermon. Only they will not consent to limit the full spiritual meaning of the expressions used by any narrow interpretation of sect or creed. "The vast responsibility of Empire" rests not on the shoulders of the King alone, but on all who are subjects and citizens of the State and so form the body-politic of the Empire of which the King is the symbolical head as the devine representative of Godly Power on earth.

"Among men I am the King," said the Lord Sri Krishna to Arjuna, and the accepted Ideal of Kingship as propounded by our *Dharmesastras* is the same as the Lord Bishop of Madras so well and happily expressed in the beautiful sermon which he preached from his place in the Coronation Durbar Camp, "Rajah" means one who pleases all entrusted to his care.

"The history of the world is the gradual fulfilment, even through the working of human passions and ambitions, of God's Eternal Will. Whatever is out of harmony with that Will comes to nought. Whatever opposes it is swept away." "The Kingdom of the World" must *ever remain* "the Kingdom of the Lord" and of His Son, the anointed of the Lord and the Saviour of men. I use Christ in the fullest significance of the word as "the Son of God and the Saviour of men"—*the Kumara Guru*—"the Son and Saviour" with whom every Hindu is only too familiar.

The Bishop of Madras has lifted on high the Holy Flag of Truth, and may all true sons of Barathavarsha and the Empire stand by it and fight for Truth—for Truth is a principle that must triumph in the end. Let us, by all means, sweep away the narrow traditions and unspiritual (unchristian) feeling that make the Brotherhood of Man impossible. I trust everyone will bear in mind the exhortation of the noble minded Bishop who expressed the need of the hour as "a sincere effort on the part of individual men and women to look fairly at the facts of life in the spirit of Christ (which is the Spirit of Truth and of Self-Sacrifice) and to apply to their relations with all classes and all races the principle of Brotherhood." All India and "the better mind of India" which is keeping 'the Altar-Fire of Consciousness' (*Chidagnikunda*) alive by sacrificing their own individual selves therein say 'Amen!' to this.

As one who has been working now for eleven years uninterruptedly in the cause of truth, ever trying to keep "the Highest Ideal" before man, it gives me great pleasure to bear willing testimony to the truth of the Bishop's statement, that in spite of the frailties and failings of the majority of Engilshmen such as we ordinarily meet with in India, there are good souls and true who are working with a true heart, realising their responsibility to the World and the Empire.

# The Truth Behind the Coronation Durbar.

The "Ideal Englishman" in India not only stands for efficiency, for duty and for justice but he also stands still more definitely for Brotherhood and Love, though his lower passions and ambitions make him forget the highest ideal in the struggle to be ever a victor in the battle of life. I did come across the ideal Englishman some 11 years ago and I can speak of him only in the spirit in which he shone before the Holy Mystery of the Lord when he thirsted for a moment to know its meaning. On that momentous occasion was conceived the Mission of the Empire and the World which the Lord Bishop so impressively put before the August Congregation to whom he preached his thrilling sermon.*

After putting before the imperial congregation "the Final Goal" as "the Fatherhood of God and the Brotherhood of Man," the holy man inspired of God for the great occasion spoke, in words that must ring into the ears of all good men and true unto eternity, as follows :—

**"The permanent value** of any Empire or any social nstitution must depend upon its power of bringing near the Kingdom of God by making real and effective in the world the ideal of Brotherhood" that is to say, of "Christly Love"-*Paramkarunai* which feeds on and grows perfect by "Neighbourly Love" or *Jeevakarunium.*

" Here then lies the work of our Empire in the coming years, and let us not forget that *the achievement of this great end does not lie merely with statesmen and politicians*, but FAR MORE WITH THE ORDINARY PEOPLE IN THE ORDINARY ROUTINE OF DAILY LIFE."

The italics and small capitals are mine; and I emphasise most because that is a truth which has impressed itself strongly on me and possessed my heart and soul these many years. Call it accident or what you will, I see the guiding Hand of Providence in the incident which brought me a note from the Editor of a leading Almanac and Directory for revised and "up to date" information concerning the work to which I have dedicated myself heart and soul 11 years ago, giving it the universal name of "ANANDA MISSION" whose origin and aim as I just copied it for the Editor of the Directory I give below without mutilation or alteration. The ANANDA MISSION which aims at realising "the permanent value of any Empire or any social institution" as beautifully propounded by the Lord Bishop of Madras, was first conceived at Chidambaram after the *Arudradarisanam* of 1901, on the motion of an eminent Englishman who thirsted for a moment to know the truth of the Holy Mystery *'Chidambara Rahasyam'* and called into existence by the Grace of the Almighty at the instance of a true Englishman thirsting to know " the Truth as it presents it' to a seeker who seeksse[...] " without reference to this or that mor[...] less divine system.". Planned on Chri[...] founded on Thursday week of the [...] for its aim, "the propagation of Tru[...] the Way to Health, Happiness and Li[...] Help, Self-Control and Self-Culture.". "Our [...] purification of the Human mind" and our mot[...] your wagon to a star." We allow the fullest [...] thought and action to all, demanding of them [...] sistency in thought, word and deed. Our [...] work are indicated by the Vedic injunctions w[...] ted *viz.*, "*Satyam Vada*"—" Speak the Truth"; [...] *mam Charu.*" Do thy duty *i.e., Obey the Moral* [...] *Being.*" Our Guardian Spirit is *Ananda N*[...] Holy Ghost," and our leader and guide is *S*[...] *nanda Satguru* to whom we bow in salutation [...] obedience.

It was under the guidance of this Spirit that [...] the name of Georgetown as a substitute for [...] name "Black Town" and did many other t[...] have met with Royal Approval. "Recognitio[...] seek and do not want, except the approval of [...] consciousness which I have since received in [...] though men may praise and blame one anothe[...] to the mould they find themselves in.

It does one's heart good to affirm and re[...] Truth behind the Coronation Durbar" when it [...] home to men's minds in the most prominent [...] same time the most impressive and holy way on [...] and sacred occasion like the solemn Church-Servi[...] Coronation Durbar Camp," on a day which i[...] wholly and entirely to the Service of God. Let [...] King or subjects—realise "the Final Goal" whi[...] Unity of God and Comity of Nations.

For what does the Brotherhood of Man amo[...] the end but the comity of nations, just as the br[...] of man indicate the comity of class and creed in [...] stitution of a State. "Nothing less than the [...] Self-Sacrifice of Christ will avail for the great wor[...] pire which God has entrusted to us (Indians and [...] men alike) *to-day*"-the great Coronation Durbar D[...] India claims its Sovereign Emperor true as [...] entrusted to keep the Ancient Ideal of Kingship [...] and hand it down from generation to generat[...] making it real and effective in the world," *i.e. in e*[...] *life*, the ideal of Kingship which has been so [...] preached in the name of God and heard with [...] on the Sabbath preceding this, the Great Co[...] Durbar Day.—*Aum Tat Sat.*

Lalitalaya, Madras, S. } C. V. SWAMINATHA[...]
*12th December 1911.* } K.

* The Madras *Mail* in its issue of 16th December published only so far, while the whole appeared unabridged in the *Madras Standard* of 15th December and the *Indian Patriot* of 18th idem.

PRINTED AT THE SOUTH INDIAN PRESS 18- LINGHI CHETTY ST., G: T. MADRAS.